# சித்த மருத்துவத் தொகையகராதி

தொகுப்பாசிரியர்
டாக்டர் சே. பிரேமா எம்.டி. (சித்தா)
இணைப்பேராசிரியர், சித்த மருத்துவத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்-613 001

ISBN : 81—7090—158—8

தமிழ் பல்கலைக்கழக வெளியீடு : 126

திருவள்ளுவர் ஆண்டு 2020, மார்கழி—திசம்பர், 1989

நூல் : **சித்த மருத்துவத் தொகையகராதி**

ஆசிரியர் : **சே. பிரேமா**

பதிப்பு : முதற்பதிப்பு

விலை : **உரூ. 30**

அச்சு : ஸ்ரீ வேலன் அச்சகம், சிதம்பரம்

# பொருளடக்கம்

# முன்னுரை

சித்த மருத்துவக் கல்வி பயிலும்போது அஞ்சுப்பு, திரிகடுகு, திரிபலை போன்ற தொகைச் சொற்களைத் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது. இவை போன்ற தொகைச் சொற்கள் எந்த நூலில் வந்தனவோ அந்நூலின் உரையாசிரியர் கூறியபடி அவற்றைப் படித்து மனத்திலிருத்திக் கொண்டோம். ஒவ்வொரு தொகைச் சொல்லுக்கும் ஒவ்வொரு நூலைத் தேடாமல் இவையனைத்தும் ஒன்றாக இருந்தால் அறிவதற்கு எளிதாக இருக்குமே என்று நாங்கள் நினைத்ததுண்டு. பின்னாளில் மிகக் குறைவாக உள்ள தொகைச் சொற்களில் மிகச் சிலவே ஞாபகத்தில் இருந்தன. மற்றவை மறந்து போயின.

சித்த மருத்துவத்தில் மருந்துகள், நோய்கள் போன்றவை பாடலாக அமைந்துள்ளமையால் அவற்றை முடிந்தவரையில் மனனம் செய்து வைத்துக்கொள்வோம் ஒருமுறை ஒரு நேர்முகத் தேர்வில் தயிர்சுண்டி சூரணத்தில் சேரும் சரக்குகளைக் கூறும்படிக் கேட்டார்கள். நானும் உடனே,

> ''அஞ்சுப்பு மஞ்சுபல மவ்வளவும் மாச்சுக்கு
> மிஞ்சிப் புளித்த தயி ரோர்வீசை — துஞ்சலுற
> எல்லுலர்த்தித் தூளாக் கினிதருந்து மூன்றுவிரல்
> இல்லைஅசீர் ணம்பேதி யே''

என்று மடமடவென்று பாட்டைச் சொன்னேன். இதில் ''அஞ்சுப்பு'' என்னவென்று கேட்டனர். தட்டுத்தடுமாறி 4 உப்புகளைச் சொல்லிவிட்டேன். ஐந்தாவது உப்பு ஞாபகம் வரவில்லை. சித்த மருத்துவத்திற்கென்று ஒரு தொகையகராதி இருக்குமானால் அதைப் பார்த்துக் கொண்டு வந்திருக்கலாமே என்று தோன்றியது. ஆனாலும் அதை நானே எழுதவேண்டும் என்று தோன்றவில்லை.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் இணைப் பேராசிரியராகப் பணியிலமர்ந்து 'போகர் வைத்தியம் 700' என்ற என் முதல் நூலைப் பதிப்பிக்கும்போது மீண்டும் தொகைச் சொற்களை அறியவேண்டிய தேவை நேர்ந்தது. அந்நூலுக்குத் தொடர்பான தொகைச் சொற்களை ஒவ்வொரு நூலாகத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. அப்போதுதான் சித்த மருத்துவத்திற்கென்று ஒரு தொகையகராதியை நாமே தொகுக்க வேண்டுமென்று தீவிரமாக ஈடுபட ஆரம்பித்தேன்.

இந்நூல் பொது மூலிகை, தாது, சீவ வகுப்பு எனப் பிரித்து அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளது. இவை இலக்கத் தொகை முறையிலும் அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

இந்நூல் சித்த மருத்துவம் பயில்வோருக்கும் ஆய்வாளர்களுக்கும் சித்த மருத்துவ நூல் இயற்றுவோருக்கும் மிகவும் பயனுடையதாக இருக்கும் என்பது எனது நம்பிக்கை.

இந்நூல் தொகுக்கும் பணியைக் கருத்திற்கொண்டு தமது அளப்பெரிய அலுவல்களுக்கிடையிலும் வெளியிடங்களுக்குச் செல்லும்போதெல்லாம் இத்தொகுப்பிற்குத் துணை செய்யும் நூற்களை வாங்கிவந்து வழங்கி இப்பணி சிறப்பாக அமைய முழு ஊக்கமும் உதவியும் அளித்த தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முதுமுனைவர் வ.அய். சுப்ரமணியம் அவர்களின் பெருந்தகவினை வார்த்தைகளால் கூறுவது கடினம். அவர்களுக்கு என் மனம் நிறைந்த நன்றி உரியது. இத்தொகுப்பை நூல் வடிவாக்கி வெளியிட அனுமதி வழங்கிய துணைவேந்தர் முனைவர் ச. அகத்தியலிங்கம் பி.எச்டி. அவர்களுக்கு என் நன்றி உரியது. பல்வேறு அலுவல்களுக்கிடையேயும் சிரமம் பாராது இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய தமிழ்ப் பல்கலைக்கழக இந்நாள் துணைவேந்தர் முனைவர் சி. பால சுப்பிரமணியன் எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி., அவர்களுக்கும் என் நன்றி அளப்பரியது. இந்நூலில் பிழைகள் நீக்கி, சில அரிய தொகைச் சொற்களைச் சேர்க்க உதவிய தமிழ்ப் பல்கலைக்கழக சுவடித்துறையில் சுவடிப் பொறுப்பாளராக உள்ள திரு. ப. வெ. நாகராசன், பி. லிட். அவர்களுக்கும் பல்வேறு

இடங்களிலிருந்து நூல்களையும் தொகைச் சொற்களையும் தொகுத்துத் தந்துதவிய தஞ்சை மாவட்டம், அம்மாப்பேட்டை ஆரம்ப சுகாதார நிலைய உதவி மருத்துவர் மரு. ச. அரங்க ராசன் பி.ஐ.எம். அவர்களுக்கும் இந்நூல் தொடர்பான ஆலோசனைகள் மற்றும் நூல்கள் வழங்கிய தமிழ்ப் பல்கலைக் கழக நூலக இயக்குநர் திரு த. பத்மநாபன் அவர்களுக்கும் என் நன்றி. இந்நூலில் அச்சுப்பிழைகள் நேராமல் திருத்தியமைத்துக் கொடுத்த தமிழ்ப் பல்கலைக்கழக பதிப்புத்துறை உதவி இயக்குநர் புலவர். சி. இளங்கோவன் அவர்களுக்கும் அழகிய முறையில் அச்சியற்றிய சிதம்பரம் ஸ்ரீ வேலன் அச்சக நிறுவனத்திற்கும் என் நன்றி உரியது.

**சே. பிரேமா**

**தமிழ்ப் பல்கலைக்கழகம்**
**தஞ்சாவூர்-1**

# பதிப்புரை

'வாலறிவன்' என வள்ளுவர் வகுத்துக் காட்டிய இறையியல்பைச் சித்துருவாகக் கண்டவர் திருவருட்பா இசைத்த தெய்வத்தமிழ் அடிகளார்.

அறிவு வடிவாக ஆண்டவனை அறிந்து போற்றிய தமிழ்ப் பெருமக்கள், அறிவுநெறி முறையில் மருத்துவ முறைகளைக் கண்டறிந்த பேரறிஞர்களைச் சித்தர்கள் எனப் போற்றிச் சிறப்பித்தனர். அவர்கள் கண்டு தெளிந்து போற்றிவளர்த்த மருத்துவ முறையும் சித்தர் மருத்துவம் — சித்த மருத்துவம் எனப் பெயர் பெற்றது எனக் கூறுதல் பொருத்தமுடைத்தே.

வந்தபின்னர் நோய்நாடி, நோய்முதல் நாடி, அது தணிக்கும் வாய்நாடுவதினும் நோய் வாராமல் தடுக்கும் வழிமுறைகளைக் கண்டறிந்தவர் தமிழர் என்பதிலே நாம் பெருமையும் பெருமிதமும் கொள்ளலாம்.

வளிப்பகுதி, பித்தப்பகுதி,ஐப்பகுதிகள் மிகினும் குறையினும் நோய் செய்வதை அறிந்து ''அற்றால் அளவறிந்து உண்க!'' என்று அறங்கண்டு கூறியவர் வள்ளுவர்.

உள்ளம், உரை, உடல் என்னும் மூன்றுமே ஒருநெறிப்படின்-அறநெறிப்படின் உறுபிணி வருதலைத் தவிர்க்க வழியுண்டாகும் என்பதைக் கண்டவர் நம்மவர்.

அறுவகைச் சுவையோடு அவியலும் பொறியலும் மசியலும் துவையலும் கூட்டும் குழம்புமாக உண்டு மகிழும் பேறுபெற்றவர்களும் தமிழ்ப் பெருமக்களே. அத்தகைய உணவு முறையில் வந்த பிணி நீங்கவும் வரத்தகுபிணி வளர்உடலை நெருங்கா வண்ணமும் மிளகும் சீரசமும் வெந்தயமும் வெங்காயமும் மஞ்சளும் இஞ்சியும் கீரையும் கிழங்கும் பச்சைக்காயும் கறியு

மாக உணவாக்கி உண்டு நல்வாழ்வுத் துறையின் நலங்கண்டு மகிழ்ந்தவர்கள் தமிழ்ப் பெருமக்களே.

செந்தமிழர் அறிந்து போற்றிய சித்த மருத்துவத்தினை — இயற்கை நல மருத்துவத்தினை வையகமே ஏற்றுப் போற்றும் வழிமுறைகளைக் கண்டறிந்து வாழத் துடிக்கிறது.

இந்தச் சூழ்நிலையில் தமிழ்நாட்டு அரசும் தமிழ்ப் பல்கலைக்கழகமும் பண்டிருந்த சித்த மருத்துவமுறையைச் சீர்தூக்கி ஆயும் பணியில் ஈடுபட்டிருப்பதில் வியப்பேதும் இல்லை.

சித்த மருத்துவ ஆய்வுத்துறைப் பேராசிரியை **திருமதி முனைவர்** சே. **பிரேமா** அவர்கள், மாணவர்க்கும் ஆய்வாளர்க்கும் மருத்துவர்க்கும் பயன்படும் வகையில் **சித்த மருத்துவத் தொகையகராதி** ஒன்றைத் தொகுத்தளித்துள்ளார்கள்.

சித்தமருத்துவத்தின் செம்மையையும் சீர்மையையும் கண்டறிந்து அதன் ஆக்கத்தில் ஊக்கம் காட்டும் தமிழ்நாட்டுக் கல்வியமைச்சரும் தமிழ்ப் பல்கலைக்கழக இணைவேந்தருமாகிய மாண்புமிகு டாக்டர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கும் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மாண்புமிகு முனைவர் சி. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும் நூலாசிரியர் அவர்களுக்கும் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றது.

சித்த மருத்துவத் துறையில் இன்னும் எத்துணை எத்துணையோ உண்டு, அவற்றையெல்லாம் கண்டு தெளிந்து கனிதமிழில் கொண்டுவரும் ஆற்றல் படைத்த டாக்டர். சே. பிரேமா அவர்களைத் தமிழகம் வாழ்த்தி வரவேற்று மகிழும்.

**தமிழ்ப் பல்கலைக்கழகம்**
**தஞ்சாவூர்-1.**

புலவர். சி. **இளங்கோவன்,**
உதவி இயக்குநர் - பதிப்புத்துறை.

முனைவர் சி. பாலசுப்பிரமணியன்
எம்.ஏ., எம்.லிட்., பி.எச்டி.,
துணைவேந்தர்

# அணிந்துரை

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னேயே தமிழர் மருத்துவத்துறையில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பதைப் பல சித்த மருத்துவ நூல்கள் தெளிவுறக் காட்டுகின்றன. நோய் நாடலும் நோய் முதல் நாடலும் அது தணிக்கும் வாய்நாடலும் சித்த மருத்துவ முறை என்பது தெளிவு. வாத பித்த சிலேட்டும நாடிகளைக் கொண்டு மனிதனின் உடல் நிலையைக் கணித்தறியும் நுண்ணோக்கு பண்டைத்தமிழர்க்கிருந்தது. பல்வேறு இயற்கைப் பொருள்களைப் பக்குவப் படுத்தியும் வேதியல் முறையில் பகுத்தும் கலந்தும் அரிய மருத்துவப் பண்புமிக்க மருந்துகளைக் கண்டறிந்த சித்த மருத்துவமுறை வழக்கற்றுப் போகாமல் பாதுகாப்பது தமிழர் கடனாகும்.

அகத்தியர், யூகி, தேரையர், போகர், திருமூலர், புலிப்பாணி முதலான சித்தர்கள் அருளிய மருத்துவ முறைகள் செய்யுள் வடிவில் நூலாகக் கிடைக்கின்றன. இவ்வகை நூல்களில் காணப்பெறும் பல தொகைச் சொற்களுக்குரிய விளக்கங்கள் பெற்றால் இச்செய்யுட்களை மேலும் நன்கு புரிந்துகொள்ள இயலுமென்ற கருத்தில், இயற்றப்பெற்றுள்ளது சித்த மருத்துவத் தொகையகராதி எனும் இந்நூல், மருந்துகள், நோய்கள், உடற்கூறுகள், உடல் தத்துவங்கள் ஆகியவை குறித்த தொகைச் சொற்கள் பல்வேறு அகராதிகளிலும் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றையெல்லாம் ஒரு நூலாக ஆக்கும் நெறியில் அமைந்தது இந்நூல். பல தொகைச் சொற்களின் உள்ளடக்கத்தை மிக

எளிதாக அறியத் துணைசெய்யும் வகையில் இந்நூல் அமைந்துள்ளமை பாராட்டற்குரியது.

அட்டசித்தி, அட்டகருமம், அட்டபந்தனம், அட்டவசுக்கள் அட்டாங்க யோகம், ஆகியன எல்லாம் எவையெவை எனப் பார்த்த அளவில் வேறு விளக்கம் தேவையின்றிப் புரிந்து சொள்ளத் துணை செய்கிறது இந்நூல். உடம்பினுள் எழும் பல ஒலிகளுக்கு ஆங்கிலப் பெயர்ப்பு தந்திருப்பது போற்றற்குரியது. இயன்ற இடத்திலெல்லாம் இம்முறையை மேலும் மேற் கொள்ளலாம்.

பல மருந்து மூலங்கள் தூய தமிழில் அமைந்துள்ளமை காண மகிழ்ச்சியுண்டாகிறது. தூதுவளை என்பதைத் தூதுளை என்றும் செம்பரத்தை என்பதைச் செம்பருத்தி என்றும் எழுதினால் மேலும் சிறப்பாகும்.

இந்தத் தொகை நூல் மாணவர்க்கும் ஆராய்ச்சியாளர் களுக்கும் மருத்துவர்களுக்கும் இத்துறை ஆர்வலர்களுக்கும் பெரிதும் பயன் நல்கும். நூலின் இறுதியில் இலக்கத்தொகை முறை அமைந்திருப்பது பாராட்டுக்குரியது.

**தமிழ்ப் பல்கலைக்கழகம்**
**தஞ்சாவூர்-1**

**சி. பாலசுப்பிரமணியன்**

# பொது

## அகங்காரம்-3

தைசசாகங்காரம்
வைகாரிகாகங்காரம்
பௌதாதிகாகங்காரம்

## அகவாயுக்கள்-5

உடம்பிலுள்ள அந்தக் கரணங்களைச் சீவனோடு கூட்டி நின்று ஆட்டுவிக்கும் ஐந்துவித வாயுக்கள்

1. வைரம்பன்
2. முக்கியன்
3. பிரபஞ்சனன்
4. அந்தரியாமி
5. மகாபிராணன்

## அகவியல்-3

1. அசுத்தம்
2. அறியாமை
3. சுத்தம்

## அக்கினி-4

வயிற்றில் உண்டாகும் நான்குவிதத் தீக்கள்

1. சமாக்கினி — மத்திமபசி
2. மந்தாக்கினி — மந்தப்பசி
3. தீட்சண்ணாக்கினி — தீவிரப்பசி
4. விடமாக்கினி — ஒருசமயம் பசியும், மற்றொரு சமயம் பசியின்மையும்

## அக்கினி-4 (வேறு)

மருந்து செய்வதற்கான தீயின் அளவு

1. தீபாக்கினி-1 கட்டை (இருவிரல் கனம்)
2. கமலாக்கினி-2கட்டை
3. கதலியாக்கினி-3 கட்டை
4. காடாக்கினி-4 கட்டை

**அக்கினிவகை-5 (வேறு)**

1. சுட்டிகை
2. வேது
3. ஒற்றடம்
4. பொட்டணம்
5. புகை

**அங்கம்-5**

1. திதி
2. வாரம்
3. நட்சத்திரம்
4. யோகம்
5. கரணம்

**அஞ்செழுத்து**

ந, ம, சி, வ், ய

**அட்டகருமம்**

1. ஆக்கருடணம்
2. உச்சாடணம்
3. பேதனம்
4. மாரணம்
5. மோகனம்
6. வசியம்
7. வித்வேடணம்
8. தம்பனம்

**அட்டசித்தி**

1. அணிமா
2. மகிமா
3. இலகிமா
4. கரிமா
5. பிராத்தி
6. பிராகாமியம்
7. ஈசத்துவம்
8. வசித்துவம்

**அட்டசுபம்**
**(எண்வகை மங்கலம்)**

1. இணைக்கயல்
2. கண்ணாடி
3. சாமரம்
4. கொடி
5. தொட்டி
6. நிறைகுடம்
7. முரசு
8. விளக்கு

**அட்டதனம்**

1. அழகு
2. குணம்
3. ஆயுள்
4. குலம்
5. சம்பத்து
6. வித்தை
7. விவேகம்
8. தனம்

**அட்டதிக்கு**

1. கிழக்கு
2. தென்கிழக்கு
3. தெற்கு
4. தென்மேற்கு
5. வடக்கு
6. வடகிழக்கு
7. மேற்கு
8. வடமேற்கு

**அட்டபந்தனம்**

எட்டுவிதச் சரக்குகளை எடை போட்டுச் சேர்த்தரைத்துச் செய்யும் மருந்து

1. கருப்பு அல்லது வெள்ளைக் குங்கிலியம்
2. சுக்கான்கல்
3. தேன்மெழுகு
4. செம்பஞ்சு
5. கொம்பரக்கு
6. காவிக்கல்
7. வெண்ணெய்
8. மைசாட்சி

**அட்டபோகம்**

1. அணிகலன்
2. ஆடை
3. தாம்பூலம்
4. பரிமளம்
5. சங்கீதம்
6. பூவமளி
7. பெண்
8. போசனம்

**அட்டமணம்**

எண்வகைத் திருமணங்கள்

1. பிர்மமணம்
2. பிரசாபத்தியமணம்
3. ஆரிடமணம்
4. தெய்வமணம்
5. காந்தருவமணம்
6. அசுரமணம்
7. இராக்கதமணம்
8. பைசாசமணம்

**அட்டமூர்த்தங்கள்**

1. பூமி
2. நீர்
3. தேயு
4. வாயு
5. ஆகாயம்
6. சூரியன்
7. சந்திரன்
8. ஆன்மா

**அட்டமெய்ப்பரிசம்**

அடியிற்கண்ட செயல்களினால் ஏற்படும் உடம்பின் எட்டு விதமான உணர்ச்சி

1. ஊன்றல்
2. கட்டல்
3. குத்தல்
4. தடவல்
5. தட்டல்
6. பற்றல்
7. வெட்டல்
8. தீண்டல்

**அட்டராகம்**

1. காமம்
2. குரோதம்
3. உலோபம்
4. மோகம்
5. மதம்
6. மாற்சரியம்
7. இடும்பை
8. அகங்காரம்

**அட்டவசுக்கள்**

1. அனலன்
2. அனிலன்
3. ஆபன்
4. சோமன்
5. தரன்
6. துருவன்
7. பிரத்தியூகன்
8. பிரபாசன்

**அட்டவிகாரம்**

மனிதருக்கு உண்டான எட்டுவிதக் கெட்ட குணங்கள்

1. காமம்
2. குரோதம்
3. உலோபம்
4. மோகம்
5. மதம்
6. மாற்சரியம்
7. இடும்பை
8. வேகம்

**அட்டாங்கம்**

1. தலை — ஒன்று
2. கை — இரண்டு
3. கால் — இரண்டு
4. செவி — இரண்டு
5. மார்பு
   அல்லது
   மெய் — ஒன்று

**அட்டாங்க யோகம்**

1. இயமம்
2. நியமம்
3. ஆசனம்
4. பிராணாயாமம்
5. பிரத்தியாகாரம்
6. தாரணை
7. தியானம்
8. சமாதி

**அட்டா தசகுணம்**

உடம்பிற்குரிய பதினெட்டுக் குணங்கள்

1. அதிசயம்
2. இன்பம்
3. உவகை
4. உறக்கம்
5. கேதம்
6. கையறவு
7. நரை
8. நினைப்பு
9. நீர்வேட்கை
10. நோய்
11. பசி
12. பயம்
13. பிறப்பு
14. மதம்
15. மரணம்
16. வியர்த்தல்
17. வெகுளி
18. வேண்டல்

**அதகாயப் பகுதிகள்–3**

1. தொடை
2. கால்
3. பாதம்

**அந்தக்கரணங்கள் - 4**

1. மனம்
2. புத்தி
3. சித்தம்
4. அகங்காரம்

**அப்பவருக்கம்-10**

1. அபூபம்
2. இலையடை
3. கஞ்சம்
4. சஷ்குலி
5. நொலையல்
6. பூரிகை
7. பொள்ளல்
8. போனகம்
9. மண்டிகை
10. மெல்லடை

**அமிர்தம்-2**

1. தேவாமிர்தம்
2. பஞ்சாமிர்தம்

**அயனங்கள் - 2**

1. உத்தராயனம்
2. தெட்சணாயனம்

**அளவு -4**

1. எண்ணல்
2. எடுத்தல்
3. முகத்தல்
4. நீட்டல்

**அளவை-8**

1. காட்சி
2. அனுமானம்
3. ஆகமம்
4. அருத்தாபத்தி
5. உவமானம்
6. அபாவம்
7. சம்பவம்
8. ஐதீகம்

**அறுசுவை**

1. இனிப்பு
2. புளிப்பு
3. உவர்ப்பு
4. கைப்பு
5. கார்ப்பு
6. துவர்ப்பு

**அறுதொழில்**

1. உழவு
2. தொழில்
3. வாணிபம்
4. வரைவு
5. வித்தை
6. சிற்பம்

**அறுவகை துர்க்குணம்**

1. ஆசியம் அல்லது அவமதிச் சிரிப்பு
2. பேராசை
3. வெறுப்பு
4. சோகம்
5. அருவருப்பு
6. பயம்

**அறுவைத்தொழில்வகை**

1. அறுவை
2. கீறல்
3. குருதிவாங்கல்
4. அட்டைவிடல்
5. சலாகையிடல்
6. வர்த்திவைத்தல்
7. ஊதல்
8. பீச்சல்
9. உறிஞ்சல்
10. கொம்புகட்டல்
11. முறிச்சல்
12. தொக்கணம்
13. கட்டுதல்

**ஆசயம்—5**

1. அமர்வாசயம் (இரைகுடல்)
2. பகிர்வாசயம் (செரிகுடல்)
3. சலவாசயம் (நீர்க்குடல்)
4. மலவாசயம் (மலக்குடல்)
5. சுக்கிலவாசயம் (வெண்ணீர்க்குடல்)

**ஆசனபேதம்–38**

1. சித்தாசனம்
2. சிங்காசனம்
3. சுவத்திகாசனம்
4. சௌவியாசனம்
5. சூலாசனம்
6. சுகாசனம்
7. சருவதோபத் திராசனம்
8. கோமுகாசனம்
9. கருடாசனம்
10. மயூராசனம்
11. மச்சேந்திராசனம்
12. மற்சாசனம்
13. முற்கராசனம்
14. மண்டூகாசனம்
15. மிருகாசனம்
16. நாகாசனம்
17. குக்குடாசனம்
18. குஞ்சராசனம்
19. கூர்மாசனம்
20. காஷ்டாசனம்
21. கிரவுஞ்சாசனம்
22. கடகாசனம்
23. காமதகனாசனம்
24. யோனியாசனம்
25. வியாக்கிராசனம்
26. வைநிகாசனம்
27. வத்திராசனம்
28. வாசவாசனம்
29. வீராசனம்
30. வராகாசனம்
31. பரியங்காசனம்
32. பதுமாசனம்
33. பதாசனம்
34. பட்சிமோத்தாசனம்
35. திரிபதாசனம்
36. அத்தனாசனம்
37. அயிம்மாசனம்
38. அர்த்தாசனம்

**ஆதார தேவதைகள் - 6**

1. விநாயகர் — மூலாதாரம்
2. பிரமன் — சுவாதிட்டானம்
3. விட்டுணு — மணிபூரகம்
4. உருத்திரன் — அனாகதம்
5. மகேசுரம் — விசுத்தி
6. சதாசிவன் — ஆக்கினை

**ஆறாதாரம்**

1. மூலாதாரம்
2. சுவாதிட்டானம்
3. மணிபூரகம்
4. அனாகதம்
5. விசுத்தி
6. ஆக்கினை

**ஆன்மாவின் இரண்டுவித உபாதைகள்**

1. காரணாவத்தை
2. காரியாவத்தை

**இயல்பாக விரும்பும் மூன்று**

1. கடமை
2. செல்வம்
3. பெண்போகம்

**இருகண்**

1. ஊனக்கண்
2. ஞானக்கண்

**இருநேரம்**

1. காலை
2. மாலை

**இருபனி**

1. முன்பனி
2. பின்பனி

**இருமரபு**

1. தாய்மரபு
2. தந்தைமரபு

**இருமருந்து**

1. அகமருந்து
2. புறமருந்து

**1) அகமருந்து-32**

1. சுரசம்
2. சாறு
3. குடிநீர்
4. கற்கம்
5. உட்களி
6. அடை
7. சூரணம்
8. பிட்டு
9. வடகம்
10. வெண்ணெய்
11. மணப்பாகு
12. நெய்
13. இரசாயனம்
14. இலேகியம்
15. எண்ணெய்
16. மாத்திரை

17. கடுகு
18. பக்குவம்
19. தேனூறல்
20. இநீர்
21. மெழுகு
22. குழம்பு
23. பதங்கம்
24. செந்தூரம்
25. பற்பம்
26. கட்டு
27. உருக்கு
28. களங்கு
29. சுண்ணம்
30. கற்பம்
31. சத்து
32. குருகுளிகை

**அகமருந்து-32**
**(செய்விதம்-24)**

1. கருக்கல்
2. அரைத்தல்
3. கசக்குதல்
4. கலக்குதல்
5. வறுத்தல்
6. கழற்றுதல்
7. உருக்குதல்
8. இறுத்தல்
9. உலர்த்தல்
10. உறைத்தல்
11. குழப்புதல்
12. உடைத்தல்
13. நறுக்குதல்
14. உருட்டுதல்
15. நகக்குதல்
16. நசுக்குதல்
17. பொசுக்குதல்
18. நனைத்தல்
19. எரித்தல்
20. வழுக்குதல்
21. இறுக்குதல்
22. இழைத்தல்
23. குழைத்தல்
24. எடுத்தல்

**2) புறமருந்துகள்-32**

1. கட்டு
2. பற்று
3. ஒற்றடம்
4. பூச்சு
5. வேது
6. பொட்டணம்
7. தொக்கணம்
8. புகை
9. மை
10. பொடிதிமிர்தல்
11. கலிக்கம்
12. நசியம்
13. ஊதல்
14. நாசிகாபரணம்
15. களிம்பு
16. சீலை
17. நீர்
18. வர்த்தி
19. சுட்டிகை
20. சலாகை
21. பசை
22. களி
23. பொடி

24. முறிச்சல்
25. கீறல்
26. காரம்
27. அட்டைவிடல்
28. அறுவை
29. கொம்புகட்டல்
30. குருதிவாங்கல்
31. உறிஞ்சல்
32. பீச்சு

**இருவிடம்**

1. பிராணிவிடம்
2. தாவரவிடம்

**இருவினை**

1. நல்வினை
2. தீவினை

**இனம்-4**

1. நீற்றினம் புடமிட்டு அல்லது எரித்துப் பற்ப மாக்கும் பொருள்கள்
2. உருக்கினம் — மூசையில் வைத்தூதி உருக்கும் உலோகங்கள்
3. ஏற்றினம் — உருக்கியோ புடமிட்டோ மருந்துக்குச் சத்து ஏறச் செய்யும் சரக்குகள்
4. இறக்கினம் — உருக்குவதாலும் அல்லது எரிப்பதாலும் இயல்பாகவே சத்துக்கள் இறங்கும் படியான சரக்குகள்

**உடம்பினுள் எழும் ஒலி—8**

1. காதொலி (tinnitus)
2. குரலோசை (Voice)
3. உயிர்ப்போசை (Breathing)
4. இருதயவோசை (Heart beat)
5. நெஞ்சொலி (Rales)
6. வயிற்றிரைச்சல் (Borborygmus)
7. இரைப்பொலி (wheeze)
8. நெஞ்சுக் குறுகுறுப்பு (Cardiac murmur).

**உடலவத்தை – 4**

1. நோய்
2. துன்பம்
3. ஆபத்து
4. மனக்கவலை

**உடற்குறை—8**

1. குள்ளம்
2. செவிடு
3. ஊமை
4. கூன்
5. குருடு

6. மருள்
7. உறுப்பில்லாதபிண்டம்
8. பேடு

**உடற்குறைவு - 5**

உடம்பிற்குண்டான ஐந்துவிதக்கேடுகள்

1. கொட்டாவி
2. நெட்டை
3. குறுகுறுப்பு
4. கூன்கிடை
5. நட்டுவிழல்

**உணவுப் பாகம்—4**

1. கைபாகம்— அனுபவத்தைக் கொண்டு சமைத்தல்
2. செய்பாகம் — நளபாகத்திற் சொல்லிய முறைப் படிச் சமைத்தல்
3. உருசிபாகம் —வாய்க் கினிமையாகச் சமைத்தல்
4. சாசனபாகம் வழக்கப்படிச் சமைத்தல்

**உபவேதம்—4**

1. ஆயுள்வேதம்
2. அருத்தவேதம்
3. தனுர்வேதம்
4. காந்தருவவேதம்

**உப்பிரண்டு**

இருவகை உப்பு

1. தாது உப்பு
2. தாவர உப்பு

**உப்பிரண்டு (வேறு)**

1. இயற்கை உப்பு
2. செயற்கை உப்பு

**உருக்குச் சாலை-5**

1. உலைச் சாலை
2. கூடச் சாலை
3. கரிப்புடச் சாலை
4. உமிப்புடச் சாலை
5. மயனப்புடச் சாலை

**உற்காயப் பகுதிகள்-3**

1. புயம்
2. முன்கை
3. கை

**ஊழ்வகை-3**

1. பிராரப்தம்
2. சஞ்சிதம்
3. ஆகாமியம்

**ஊனம்-2**

1. பிறப்பில் வந்த ஊனம்
2. இடையில் வந்த ஊனம்

**எழுபிறப்பு**

1. தேவர்

2. மனிதர்
3. விலங்கு
4. பறவை
5. ஊர்வன
6. நீர்வாழ்வன
7. தாவரம்

**ஏடணை-3**

1. அர்த்தவேடணை — பொருட்பற்று
2. புத்திரவேடணை — புதல்வர் பற்று
3. உலகவேடணை — உலகப்பற்று

**ஐங்கணைச் செயல்-6**

காமவிகாரத்தின் தூண்டுதலினாற் செய்யும் தொழில்கள்

1. பெருமயக்கு
2. சிந்தாகுலம் (வியாகூலம்)
3. புணர்ச்சிக்கிணங்கல்
4. மோகனம்
5. சந்தாபனம்
6. வசீகரணம்

**ஐந்து வேதை**

1. சிடிகைவேதை
2. மாற்றுயர்வுவேதை
3. கட்டுவேதை
4. தாம்பிரவேதை
5. பரிசனவேதை

**ஐம்பத்தாறு தேசம்**

1. அங்கம்
2. அருணம்
3. அவந்தி
4. ஆந்திரம்
5. இலாடம்
6. ஒட்டியம்
7. கருசம்
8. கலிங்கம்
9. கண்டம்
10. கன்னாடம்
11. காசம்
12. காசிமீரம்
13. காந்தாரம்
14. காம்போசம்
15. கிராடம்
16. குருகு
17. குடகம்
18. குந்தளம்
19. குரு
20. குவிதம்
21. கூர்ச்சரம்
22. கேகயம்
23. கேரளம்
24. கொங்கணம்
25. கொல்லம்
26. கோசலம்
27. சகம்
28. சவ்வீரம்
29. சாலவம்
30. சிங்களம்
31. சிந்து
32. சீனம்
33. சூர்சேனம்

34. சோழம்
35. சோனகம்
36. திராவிடம்
37. துளுவம்
38. தெங்கணம்
39. நிடதம்
40. நேபாளம்
41. பப்பரம்
42. பல்லவம்
43. பாஞ்சாலம்
44. பாண்டியம்
45. புலிந்தம்
46. போடம்
47. மகதம்
48. மச்சம்
49. மராடம்
50. மலையாளம்
51. மாளவம்
52. யவனம்
53. யுகந்தரம்
54. வங்கம்
55. வங்காளம்
56. விதற்பம்

**ஐம்புல நுகர்ச்சியின் பயன்-5**

ஐந்து உயிர்வாழ்வன ஐம்புல உணர்வினால் தங்கள் சாவை அடையும்

1. சுவையால் இறப்பது மீன்
2. நாற்றத்தால் — வண்டு
3. ஊற்றினால் — யானை
4. ஓசையால் — அசுணம்
5. ஒளியால் — விட்டில்

**ஐம்பூதக் கழிவு**

1. பிருதிவி — மலம்
2. அப்பு — அமுரி
3. தேயு — நாதம்
4. வாயு — உமிழ்நீர்
5. ஆகாயம் — விந்து

**ஐம்பூத நிறம்**

1. பிருதிவி — பொன்னிறம்
2. அப்பு — பளிங்கு
3. தேயு — செம்பு
4. வாயு — கருப்பு
5. ஆகாயம் — புகை

**ஐம்பூத வாயு**

1. வியானன்
2. கூர்மன்
3. கிருகரன்
4. தனஞ்செயன்
5. தேவதத்தன்

**ஐம்மாயை**

1. தமம் அல்லது மனவிருள்
2. மாயை அல்லது வஞ்சம்
3. மோகம் அல்லது ஆசை
4. அவித்தை அல்லது அஞ்ஞானம்
5. அநிர்தம் அல்லது அநித்தியம்

**ஐம்மார்க்கம்**

1. இரசிதமார்க்கம்
2. வேதைமார்க்கம்
3. முப்புமார்க்கம்
4. குளிகைமார்க்கம்
5. குருமுறைமார்க்கம்.

**ஐவகை உண்ணும் முறை**

1. கடித்தல்
2. நக்கல்
3. பருகல்
4. விழுங்கல்
5. மெல்லல்

**ஐவகைத் தந்தையார்**

1. பெற்றோன்
2. கற்பித்தோன்
3. மணம் முடிப்பித்தோன்
4. உணவு கொடுத்தோன்
5. ஆபத்தில் காத்தோன்

**ஐவகைத் தாயார்**

1. ஈன்றதாய்
2. ஊட்டுந்தாய்
3. முலைத்தாய்
4. செவிலித்தாய்
5. கைத்தாய்

**ஐவகைத் தாய் (வேறு)**

1. அரசன்தேவி
2. குருவின்தேவி
3. அண்ணன்தேவி
4. தன்தேவியை ஈன்றாள்
5. தன்னை ஈன்றாள்

**ஐவகை நெய்**

1. முடிநெய்
2. குடிநெய்
3. பிடிநெய்
4. தொளைநெய்
5. சிலைநெய்

**ஐவகைப் பித்தம்**

1. அனலப்பித்தம்
2. இரஞ்சகப்பித்தம்
3. சாதகப்பித்தம்
4. ஆலோசகப்பித்தம்
5. பிராசகப்பித்தம்

**ஐவகை வியர்வை**

1. மலச்சிக்கல்
2. சுரம் விட்ட உடம்பு
3. வாதநோய்
4. சன்னி
5. உயிர் நீங்கும் தருவாய்

**ஐவிரல் (ஐந்துவிரல்)**

1. பெருவிரல்
2. சுட்டுவிரல்
3. நடுவிரல்
4. அணிவிரல்
5. சுண்டுவிரல்

**ஒளிவகை–9**

1. நெருப்பொளி
2. சூரியவொளி
3. சந்திரவொளி
4. விளக்கொளி
5. மின்மினொளி
6. மின்னலொளி
7. காந்தவொளி
8. ஊடுசெல்லொளி
9. சோதியொளி

**ஓடதிக்கூறு - 40**

மூலிகைகளில் காணப்படும் பல அங்கங்கள்

1. பூங்கதிர்
2. பூவடியிதழ்
3. பூமடல்
4. பூலிங்கம்
5. பூந்தாதுடையதாள்
6. பூந்தாது
7. மகரந்தப்பொடி
8. பூந்தாள்
9. மொக்கு
10. பாளை
11. பூ
12. இலை
13. இலைநரம்புக் கூட்டம்
14. இலைநரம்புத் தொகுதி
15. மெல்லிழை
16. புறவிதழிலை
17. சிற்றிலை
18. காம்பிலை
19. பூங்கொத்து
20. காம்பு
21. புறவிதழ்
22. வேர்க்கொடி
23. காய், பழம்
24. கொட்டை அல்லது ஓடு
25. தாள், தண்டு
26. அடிமரம்
27. வேர்
28. கிழங்கு
29. வேர்ப்பட்டை
30. பட்டை
31. விதை
32. சதைப்பற்று
33. தளிர்
34. தழை
35. கொழுந்து
36. முளை
37. புரணி
38. கோது
39. படர்கொடிக் கூந்தல்
40. படர்கொடி

**ஓமதிரவியம் - 18**

1. விறகு
2. நெய்
3. பால்
4. தயிர்
5. துவரை
6. பொரி
7. கடுகு
8. சமித்து
9. பயறு
10. பணிகாரம்
11. வெல்லம்

12. பொரிம்மா
13. தேன்
14. குளமூசெந்நெல்
15. உளுந்து
16. சம்பாநெல்
17. எள்
18. சருவாக்யஅமுது

**கடல்-7**

1. உவர்நீர்
2. நன்னீர்
3. பால்
4. தயிர்
5. நெய்
6. கருப்பஞ்சாறு
7. ஜேன்

**கணம் 8**

1. நிலம்
2. நீர்
3. மதி
4. இயமானன்
5. சூரியன்
6. தீ
7. வாயு
8. ஆகாயம்

**கணம்-18**

1. அமரர்
2. சித்தர்
3. அசுரர்
4. தைத்தியர்
5. கருடர்
6. கின்னரர்
7. நிருதர்
8. கிம்புருடர்
9. காந்தருவர்
10. இயக்கர்
11. விஞ்சையர்
12. பூதர்
13. பைசாசர்
14. அந்தரர்
15. முனிவர்
16. உரகர்
17. ஆகாயவாசிகள்
18. போகபூமியர்

**கண்வகை-46**

அமைப்பு, தன்மை, நோய்ப்படிப் பலவகைப் படும்.

1. கருடக்கண்
2. காக்கைக்கண்
3. முண்டைக்கண்
4. ஆந்தைக்கண்
5. யானைக்கண்
6. பூனைக்கண்
7. மீன்கண்
8. மாட்டுக்கண்
9. செங்கண்
10. மயிற்கண்
11. ஊமக்கண்
12. பஞ்சண்டந்தகண்
13. மஞ்சட்கண்
14. குண்டுமணிக்கண்
15. குருட்டுக்கண்
16. இராக்கண்
17. அழிகண்

18. ஒற்றைக்கண்
19. முக்கண்
20. கூச்சக்கண்
21. கூர்மைக்கண்
22. ஊனக்கண்
23. மயக்குக்கண்
24. ஒட்டுக்கண்
25. மாலைக்கண்
26. புளித்தகண்
27. இளித்தற்கண்
28. கொள்ளிக்கண்
29. உள்ளங்கண்
30. சுற்றுக்கண்
31. சுருங்குக்கண்
32. கடைக்கண்
33. சுழற்கண்
34. புகைச்சற்கண்
35. பூக்கண்
36. பீளைக்கண்
37. இருட்டுக்கண்
38. சீழ்க்கண்
39. திறந்தகண்
40. சிமிட்டுக்கண்
41. நிலைகுத்தற்கண்
42. பொய்க்கண்
43. பிரிகண்
44. உள்வளைந்தகண்
45. நாலுகண்
46. இழிகண்

**கதி-4**

1. தேவகதி
2. மக்கட்கதி
3. விலங்கின்கதி
4. நரகதி

**கந்தம்-2**

1. நற்கந்தம்
2. துர்க்கந்தம்

**கபம் வகை**

**உருசியைப் பற்றியது**

1. மதுரக்கபம்
2. உவர்க்கபம்
3. ஆமிலக்கபம்
4. வெகுட்டுக்கபம்
5. இளைப்புக்கபம்

**பாகத்தைப் பற்றியது**

1. நீர்க்கபம்
2. கடனக்கபம்
3. திருஷ்டிக்கபம்
4. பரிட்சரக்கபம்

**கபாடச்சவ்வு வகை-11**

1. அர்த்தசந்திரக் கபாடம்
2. சிரவசடரக்கபாடம்
3. வலச்சிரவபிறைக் கபாடம்
4. மகுடக்கபாடம்
5. குல்லாக் கபாடம்
6. கண்ணீர்ப்பைக் கபாடம்
7. துவயக் கபாடம்
8. பெருங்குடற் கபாடம்

9. சுவாசாசயக்கபாடம்
10. வர்ச்சனிக்கபாடம்
11. திரிகபாடம்

**கரண்டி வகை-3**

1. ஆலக்கரண்டி
2. உச்சிக்கரண்டி
3. பொட்டுக்கரண்டி

**கரி–3**

1. அடுப்புக்கரி
2. நிலக்கரி
3. எலும்புக்கரி

**கருப்பஞ்சபூதம்**

பஞ்சபூதக் கூற்றின்படி உடம்பின் ஐந்து விதக்கழிவு கள்

அ) 1. வாய்நீர்
2. முலைப்பால்
3. அமுது
4. விந்து
5. சுரோணிதம்

(ஆ) 1. மலம்
2. சிறுநீர்
3. இரத்தம்
4. வாய்நீர்
5. விந்து

**கருமம்-5**

1. எழும்பல்
2. வீழ்தல்
3. வளைதல்
4. நிமிர்தல்
5. நடத்தல்

**கன்மேந்திரியம்-5**

1. வாக்கு (வாய்)
2. பாதம் (கால்)
3. பாணி (கை)
4. பாயுரு (எருவாய்)
5. உபத்தம் (கருவாய்)

**கன்னிகை-5**

1. அகலிகை
2. துரோபதை
3. சீதை
4. தாரை
5. மண்டோதரி

**காடு வகை-15**

1. வெள்ளக்காடு
2 புன்செய்க்காடு
3: வயற்காடு
4. மலைக்காடு
5. கரம்பைக்காடு
6 பருத்திக்காடு
7. புற்காடு
8. மாங்காடு
9. புழுதிக்காடு
10. மணற்காடு
11 புகைக்காடு
12. புதர்க்காடு
13. இடுகாடு
14. சுடுகாடு
15. பிணக்காடு

**காட்சி வகை-7**

1. ஐயக்காட்சி
2. திரிபுக்காட்சி
3. விகற்பக்காட்சி
4. பொறிவாயில்காட்சி
5. மனக்காட்சி
6. அனுபவக்காட்சி
7. யோகக்காட்சி

**காண்டல்—3**

1. திரியக்காண்டல்
2. இரட்டுறக்காண்டல்
3. தெளியக்காண்டல்

**காரம்—7**

1. காரம்
2. சிலை
3. களிம்பு
4. பொடி
5. நீர்
6. களி
7. பசை

**காற்றுவகை—7**

1. ஊதற்காற்று
2. ஊழிக்காற்று
3. புயற்காற்று
4. கடுங்காற்று
5. சூறைக்காற்று
6. சுழல்காற்று
7. பிரசண்டமாருதம்

**குடுமிவகை—3**

1. உச்சிக்குடுமி
2. முன்குடுமி
3. பின்குடுமி

**குணம்—24**

1. உருவம்
2. இரசம்
3. பரிசம்
4. கந்தம்
5. சங்கை
6. பரிமாணம்
7. வேற்றுமை
8. சையோகம்
9. விபாகம்
10. பரத்துவம்
11. அபரத்துவம்
12. குருத்துவம்
13. திரவத்துவம்
14. சிநேகம்
15. சத்தம்
16. புத்தி
17. சுகம்
18. துக்கம்
19. இச்சை
20. வெறுப்பு
21. முயற்சி
22. தர்மம்
23. அதர்மம்
24. வாசனை

**குரவர்-5**

1. அரசன்
2. உபாத்தியாயன்
3. தந்தை

4. தேசிகன்
5. மூத்தோன்

**குறடுவகை-14**

1. காகமுகக்குறடு
2. பூனைமுகக்குறடு
3. முதலைக்குறடு
4. கருமான்குறடு
5. கம்மாளன்குறடு
6. புலிமுகக்குறடு
7. எலிப்பற்குறடு
8. அழுத்துங்குறடு
9. பிடுங்குங்குறடு
10. பற்றுக்குறடு
11. என்புக்குறடு
12. பற்குறடு
13. செவிக்குறடு
14. தொண்டைக்குறடு

**குற்றம்-3**

1. காமம்
2. வெகுளி
3. மயக்கம்

**கோசம்-5**

1. அன்னமயகோசம் (உணவு உடம்பு)
2. பிராணமயகோசம் (வளி உடம்பு)
3. மனோமயகோசம் (மன உடம்பு)
4. விஞ்ஞானமயகோசம் (அறிவு உடம்பு)
5. ஆனந்தமயகோசம் (இன்ப உடம்பு)

**கோணங்கள்-7**

1. முக்கோணம்
2. ஐங்கோணம்
3. அறுகோணம்
4. எழுகோணம்
5. அட்டகோணம்
6. நவகோணம்
7. நாற்பத்து முக்கோணம்

**சங்கம் – 3**

1. முதல் சங்கம்
2. இடைச்சங்கம்
3. கடைச்சங்கம்

**சதுரங்கம்**

1. தேர்
2. கரி
3. பரி
4. காலாள்

**சதுர்விததானங்கள்**

1. அபயம்
2. ஆகாரம்
3. சாத்திரம்
4. ஔடதம்

**சத்திரக்கருவி**

1. சத்திரக்கத்தி
2. குறும்பி

3. கருமூக்குவாய்
4. கடுமுள்வாங்கி
5. மூக்குச்சலாகை
6. பொட்டு
7. மட்டக்கோலூசி
8. வட்டகை
9. செப்புக்குழைச் சலாகை
10. பஞ்சமுகச்செப்புச் சலாகை
11. களச்சிக்கோல்
12. தெண்டுசலாகை
13. நயனக்கத்தி
14. வட்டமயிர்க்கத்தி
15. சூட்டுக்கோல்
16. கறுப்புளிக்கோல்
17. படலிவூசி

**சத்தாவத்தை**

1. அஞ்சானம்
2. ஆவரணம்
3. விட்சேபம்
4 பரோட்சஞானம்
5. அபரோட்சஞானம்
6. சோகநிவர்த்தி
7. ஆனந்தம்

**சத்திரச்சாலை – 3**

1 பலுரைச்சாலை
2. சத்திரக்கருவிச்சாலை
3. அறுவைச்சாலை

**சப்தவாயு**

1. இரசம்
2. இரத்தம்
3. மாமிசம்
4. கொழுப்பு
5. எலும்பு
6. மூளை
7. சுக்கிலம்

**சப்தவாயு**

(ஏழு மண்டலங்களிலுள்ள ஏழு வாயுக்கள்)

1. ஆவகம்
2. பிரவகம்
3 சம்வகம்
4 உத்வகம்
5. விவகம்
6. பரிவகம்
7. பராவகம்

**சமாதி–6**

1. நிருவிகற்பசமாதி
2. சவ்விகற்பசமாதி
3. ஆருடசமாதி
4. சஞ்சாரசமாதி
5. வியவகாரசமாதி
6. சகசசமாதி

**சமாதிபேதம்–2**

1. சம்பிகசாதனம்
2. அசம்பிகசாதனம்

**சம்பந்தம்-4**

1. ஆன்மசம்பந்தம்
2. தேகசம்பந்தம்

3. விடயசம்பந்தம்
4. காரணசம்பந்தம்

**சரக்கைக்கட்டும் இவகைநீர்**

1. கோழிமுட்டை வெண்கரு
2. தாய்ப்பால்
3. புகைநீர்
4. சுண்ணாம்புத் தெளிநீர்
5. எலுமிச்சம்பழச்சாறு

**சலாகை12**

1. தூண்டில்முள் சலாகை
2. கரண்டிச்சலாகை
3. ஆணிச்சலாகை
4. அங்குசச்சலாகை
5. அஞ்சனச்சலாகை
6. கருப்பச்சலாகை
7. பிறைச்சலாகை
8. முனைமழுங்கிய சலாகை
9. கயிறுகோர்த்த சலாகை
10. கத்தரிச்சலாகை
11. கம்பிச்சலாகை
12. கருப்பச்சோதனைச் சலாகை

**சவ்வு-31**

1. விதானச்சவ்வு
2 சளிச்சவ்வு
3. ஆசனச்சவ்வு
4. மூளைச்சவ்வு
5. மீத்தோல்சவ்வு
6. கண்படலமேற்சவ்வு
7. கண்படலஅடிச் சவ்வு
8 குடற்சவ்வு
9 புறச்சவ்வு
10. நாதாசயபுறச்சவ்வு
11. மூக்குச்சளிச்சவ்வு
12 செவிப்பறைச்சவ்வு
13. பிண்டகச்சவ்வு
14. நாடிச்சவ்வு
15. கபாலச்சவ்வு
16 நிணநீர்க்குழல்சவ்வு
17. கருப்பைச்சவ்வு
18. பின்னற்சவ்வு
19 இரட்டைச்சவ்வு
20. கண்ணறைச்சவ்வு
21. வலிச்சவ்வு
22. சூதகச்சவ்வு
23. மயிற்காற்சவ்வு
24. சீழ்ச்சவ்வு
25. மேல்வாய்ச்சவ்வு
26. இருதயச்சவ்வு
27. நுரையீரற்சவ்வு
28. பெருவழிச்சளிச்சவ்வு
29. தொண்டைச்சவ்வு
30. தந்தச்சவ்வு
31. எலும்புச்சவ்வு

**சாத்திரம் — 3**

1. சாங்கியம் — கபிலர்
2. பதஞ்சலியம் — பதஞ்சலி

3. வேதாந்தம் — வியாசர்

**சாத்திரம் — 6**

1. வேதாந்தம்
2. வைசேடிகம்
3. பாட்டம்
4. பிரபாகரம்
5. பூருவமீமாம்சை
6. உத்தரமீமாம்சை

**சாந்திகள் — 3**

1. இருதுசாந்தி
2. புத்திரசாந்தி
3. கிரகசாந்தி

**சாமானியம் — 2**

1. பரம்
2. அபரம்

**சாலை — 3**

1. யாகசாலை
2. தவச்சாலை
3. வாகனச்சாலை

**சாவு — 2**

1. காலச்சாவு
2. அகாலச்சாவு

**சித்தாந்தம் — 4**

1. சர்வதந்திர சித்தாந்தம்
2. பிரதிதந்திர சித்தாந்தம்
3. அதிகாரண சித்தாந்தம்
4. அபிவுபாகம் சித்தாந்தம்

**சிமிழ் — 6**

1. தந்தச்சிமிழ்
2. கொம்புச்சிமிழ்
3. மரச்சிமிழ்
4. செம்புச்சிமிழ்
5. வெள்ளிச்சிமிழ்
6. மாவிலிங்கச்சிமிழ்

**சிரஞ்சீவியர் - 7**

1. அசுவத்தாமன்
2. மாபலி
3. வியாசன்
4. அனுமான்
5 விபீடணன்
6. கிருபாசாரியன்
7. பரசுராமன்

**சிவச்சின்னம் – 2**

1. உருத்திராக்கம்
2. விபூதி

**சிவதத்துவம் – 5**

1 சுத்தவித்தை
2 ஈச்சுரம்
3. சாதாக்கியம்
4 சத்தி
5. சிவம்

**சீலை மருந்து – 7**

1. காரச்சீலை
2. வெள்ளைச்சீலை
3. நீலச்சீலை
4. பச்சைசேர்வைச்சீலை
5. கருத்தகாரச்சீலை
6. மஞ்சள்காரச்சீலை
7. சிவப்புக்காரச்சீலை

**சுட்டிகை – 3**

1. மண்சுட்டிகை
2. கால்சுட்டிகை
3. காந்திசுட்டி கை

**சித்த வித்யா தத்துவங்கள்–7**

1. காலம்
2. நியதி
3. கலை
4. வித்தை
5. அராகம்
6. புருடன்
7. மாயை

**சூடேற்றும் சாலை – 9**

1. புடச்சாலை
2. சீலைப்புடச்சாலை
3. முப்பூப்புடச்சாலை
4 நெற்புடச்சாலை
5. சூரியபுடச்சாலை
6 சந்திரபுடச்சாலை
7. எரிப்புடச்சாலை
8 வெள்ளாவிச்சாலை
9 செயநீர்ச்சாலை

**சூருறை – 19**

1. ஊதல்
2. சுட்டிகை
3 சலாகை
4. நீர்
5. வர்த்தி
6. களிம்பு
7. சீலை
8. உறிஞ்சல்
9. களி
10. பசை
1'. முரிச்சல்
12. காரம்
13. கிறல்
14. அட்டைவிடல்
15. பொடி
16 பீச்சு
17. அறுவை
18. கொம்புகட்டல்
19. குருதிவாங்கல்

**செல்வங்கள-3**

1. தனம்
2 தானியம்
3. மக்கட்பேறு

**சோகம்-3**

1. புத்திரசோகம்
2. பெண்சோகம்
3. பிணிச்சோகம்

**சோலைவகை-16**

1. குரங்குச்சோலை
2. ஆண்டிச்சோலை

3. டெபிக்கிசோலை
4. செம்மண்ணுக்குளிச் சோலை
5 பிள்ளைத்தாச்சிமந்து
6. கவ்வெக்காடுமந்து சோலை
7 கவ்வச்சோலை
8. குன்றுச்சோலை
9 நோக்கோடுமந்து
10. மேல்கவ்வைச் சோலை
11. ஆனைக்காலுமந்து சோலை
12. அகநாடுமந்து சோலை
13. பெட்டுமந்து சோலை
14. கொம்புதூக்கிமந்து
15. காளப்பன்சோலை
16. காடிமந்துசோலை

**ஞானேந்திரியங்கள்–5**

1. சுரோத்திரம் (செவி)
2. துவக்கு (மெய்)
3. சட்சு (கண்)
4. சிங்குவை (நாக்கு)
5. கிராணம் (மூக்கு)

**தசகாரியம் (அத்வைத சித்தாந்தம்)**

1 மாயாரூபம்
2. மாயதரிசனம்
3. மாயாசுத்தி
4. சிவரூபம்
5. சிவதரிசனம்
6. சிவசுத்தி
7. பிரமரூபம்
8 பிரமதரிசனம்
9. தேக கைவல்யம்
10. விதேக கைவல்யம்

**தசகாரியம் (சைவ சித்தாந்தம்)**

1. தத்துவரூபம்
2 தத்துவதரிசனம்
3. தத்துவசுத்தி
4. ஆன்மதரிசனம்
5. ஆன்மரூபம்
6. ஆன்மசுத்தி
7. சிவதரிசனம்
8. சிவபோகம்
9. சிவயோகம்
10. சிவராஜயோகம்

**தசநாடிகள்**

1. இடைகலை
2. பிங்கலை
3. சுழுமுனை
4. சிகுவை
5. புருடன்
6. காந்தாரி
7. அத்தி
8. அலம்புடை
9. சங்கினி
10 குகு

**தசநாதம்**

1. மணி

2. கடல்
3. யானை
4 குழல்
5. மேகம்
6 வண்டு
7. தும்பி
8 வளை
9. பேரிகை
10. யாழ்

**தசமித்திரம்**

1. வெண்ணெய்
2. வெங்காரம்
3. குன்றி
4. வெல்லம்
5. ஆமணக்கு
6. பழம்
7. தேன்
8. அளி
9. காடி
10. புறாவின் எச்சம்

**தசவாயுக்கள்**

1. பிராணன்
2. அபானன்
3. வியானன்
4. உதானன்
5. சமானன்
6 நாகன்
7. கூர்மன்
8. கிருகரகன்
9. தேவதத்தன்
10. தனஞ்செயன்

**தசாவத்தை**

மரணமுண்டாவதற்கு முன் மனிதர்களுக்கு இயல்பிலே உண்டாகும் பத்துவித வேதனைகள்

1. பிணநாற்றம்
2. வேற்றுமை கூறல்
3. தெளிவு நாற்றம்
4. இளைப்பு
5. முகம் வேர்த்தல்
6. உடம்பு குளிர்தல்
7. அன்னத்தை நாடல்
8. கண் பஞ்சாடல்
9. உடம்பு வியர்த்தல்
10. மரணம்

**தத்துவம்-3**

1. சிவதத்துவம்
2. வித்யாதத்துவம்
3. ஆன்மதத்துவம்

**தத்துவம்-96 (யூகிமுனிவர்)**

| | | |
|---|---|---|
| 1. | பூதம் | 5 |
| 2. | பொறி | 5 |
| 3. | புலன் | 5 |
| 4. | கன்மேந்திரியம் | 5 |
| 5. | ஞானேந்திரியம் | 5 |
| 6. | கரணம் | 4 |
| 7. | அறிவு | 1 |
| 8. | நாடி | 10 |
| 9. | வாயு | 10 |
| 10. | விஷயம் | 5 |
| 11. | கோசம் | 5 |
| 12. | ஆதாரம் | 6 |

13. மண்டலம் 3
14. மலம் 3
15. தோஷம் 3
16. ஈடணை 3
17. குணம் 3
18. வினை 2
19. இராகம் 8
20. அவத்தை 5

**தத்துவம்-96 (தத்துவதீபிகை)**

1. வாசல்கள் 9
2. பொறி 10
3. புலன் 10
4. ஆதாரம் 6
5. மண்டலம் 3
6. நாடி 10
7. தாது 7
8. கோசம் 5
9. கரணம் 4
10. அவத்தை 5
11. குணம் 3
12. மலம் 3
13. இராகம் 8
14. வியாதி 3
15. வாயு 10

**தத்துவம்-96**
**(சித்தாந்தக் கட்டளை)**

1. பூதம் 5
2. ஞானேந்திரியம் 5
3. தன்மாத்திரை 5
4. கன்மேந்திரியம் 5
5. அந்தக்கரணம் 4
6. வித்தியா தத்துவம் 7
7. சுத்ததத்துவம் 5
8. பஞ்சபூதக் கூறுகள் 25
9. பிருதிவி வழிநாடி 10
10. வாயுவழிநாடி 10
11. ஆகாய வழி ஏடணை 3
12. வாக்காதியின் தொழில் 5
13. குணம் 3
14. வாக்கு 4

**தம்பனவித்தை-3**

1. மந்திரத்தில் நாவெழாமலும் கைகால் அசையாமலும் செய்தல்
2. நெருப்புக்கு ஓடும் சரக்குகளை ஓடாதபடி நிறுத்துதல்
3. கண்கட்டு வித்தை

**தலை – 11**

1. சட்டித்தலை
2. பறட்டைத்தலை
3. சுருட்டைத்தலை
4. உருக்கைத்தலை
5. பொடுகுத்தலை
6. கோபுரத்தலை
7. சொட்டைத்தலை
8. வழுக்கைத்தலை

9. மாங்காய்த்தலை
10. மொட்டைத்தலை
11 இரட்டைத்தலை

**தாபத்திரயம்**

மூன்றுவகைத் தாபங்கள்

1. கோபதாபம்
2. விரகதாபம்
3. மனத்தாபம்

**தாரணை – 9**

1. நியமதாரணை
2. மான்யதாரணை
3. பேததாரணை
4. மந்திரதாரணை
5. சதுரங்கதாரணை
6. சத்ததாரணை
7 வஸ்துதாரணை
8 வச்சிரதாரணை
9 சித்திரதாரணை

**தானம் – 10**

1. உப்பு
2. எள்
3. நெய்
4. நெல்
5. பசு
6. பூமி
7. பொன்
8. வத்திரம்
9. வெல்லம்
10. வெள்ளி

**திட்டம் – 4**

1. புடதிட்டம்
2. எரிப்புத்திட்டம்
3. இடைத்திட்டம்
4. சாரணைத்திட்டம்

**திணை – 5**

1. குறிஞ்சி
2. முல்லை
3. மருதம்
4. நெய்தல்
5. பாலை

**திதி – 15**

1. பிரதமை
2. துவிதியை
3. திரிதியை
4. சதுர்த்தி
5. பஞ்சமி
6. சட்டி
7. சத்தமி
8. அட்டமி
9. நவமி
10. தசமி
11. ஏகாதசி
12. துவாதசி
13. திரையோதசி
14. சதுர்த்தசி
15. பௌர்ணமி அல்லது அமாவாசை

**திரவியம்—4**

இயற்கையாகவே கிடைக்கும் மூலவித்து

1. மலைபடு திரவியம்
2. காடுபடு திரவியம்
3. நாடுபடு திரவியம்
4. கடல்படு திரவியம்

**கடல்படு திரவியம்**

1. பவளம்
2. முத்து
3. சங்கு
4. ஓர்க்கோலை
5. உப்பு

**காடுபடு திரவியம்**

1. தேன்கூடு
2. தேன்
3. அரக்கு
4. மயிற்பீலி
5. நாபி

**நாடுபடு திரவியம்**

1. செந்நெல்
2. சிறுபயறு
3. கரும்பு
4. வாழை
5. செவ்விளநீர்

**மலைபடு திரவியம்**

1. மிளகு
2. கோஷ்டம்
3. அகில்
4. தக்கோலம்
5. குங்குமப்பூ

**திரவியம்—9**

1. பிருதிவீ
2. அப்பு
3. தேயு
4. வாயு
5. ஆகாயம்
6. திக்கு
7. ஆன்மா
8. காலம்
9. மனம்

**திரிகபம்**

1. காசம்
2. சுவாசம்
3. சயம்

**திரிகரணம்**

1. மனம்
2. வாக்கு
3. காயம்

**திரிதோடம்**

1. வாதம்
2. பித்தம்
3. கபம்

**திரிபதார்த்தம்**

1. பதி
2. பசு
3. பாசம்

**திரிபதார்த்தம்**

உடன் துர்பலம் தருவது

1. கடும் வெயில்

2. புணர்ச்சி
3. தைலஸ்நானம்

**திரிபதார்த்தம்**

உடன் பலம் தருவது
1. குளிர்ந்தநீர்
2. மாமிசம்
3 பசும்பால்

**திரிபுடி**

1. ஞானம் அல்லது அறிவு
2. ஞேயம் அல்லது அறியப்படுபொருள்
3 ஞாதுரு அல்லது ஆன்மா

**திரிமண்டிலம்**

1. அக்கினி மண்டிலம்
2. ஆதித்த மண்டிலம்
3. சந்திரமண்டிலம்

**திரிமதுரம்**

மூன்று உருசியான பொருள்
1 தேன்
2 நெய்
3. சர்க்கரை

**திரிமனம்**

1. நினைவு
2. புத்தி
3. அறிவு

**திரிமித்திரம்**

1. குன்றி
2. வெண்கரு
3. சீனம்

**திரிமூர்த்தி**

1. பிரமா
2. விட்டுணு
3. சிவன்

**திரிவருக்கம்**

மூன்றுவித வகுப்புக்கள்
1. தாது வருக்கம்
2. தாவர வருக்கம்
3. பிராணி வருக்கம்

**திரிவசியம்**

1. ஆண் வசியம்
2. பெண் வசியம்
3. உலக வசியம்

**துவிதாங்கம்**

1. அதோங்கம்
2. ஊர்த்துவாங்கம்

**தூள்-17**

1. வாசனைத்தூள்
2. மூக்குத்தூள்
3. தும்மற்றூள்
4. ஸ்நானத்தூள்
5. மருந்துத்தூள்
6. கதம்பத்தூள்
7. பற்றூள்
8. தாவற்றூள்

9. ஊதற்றூள்
10. சொக்குத்தூள்
11. மயக்குத்தூள்
12. வசியத்தூள்
13. மசாலைத்தூள்
14. அம்பாரத்தூள்
15. இரசத்தூள்
16. குங்குமம்
17. கோலத்தூள்

**தேவர்வகை—4**

1. ஆதித்தர் (துவாதசாதித்தர்)
2. அசுவினிகள் (துவி அசுவினிகள்)
3. உருத்திரர் (ஏகாதசருத்திரர்)
4. வசுக்கள் (அட்டவசுக்கள்)

**தேவர்—5**

1. பிரமா
2. விட்டுணு
3. உருத்திரன்
4. மயேச்சுரன்
5. சதாசிவன்

**தொக்கணம்—9**

1. தட்டுதல்
2. இறுக்கல்
3. பிடித்தல்
4. முறுக்கல்
5. கைகட்டல்
6. அழுத்தல்
7. இழுத்தல்
8. மல்லாத்துதல்
9. அசைத்தல்

**தோற்றம்—2**

1. சரம்
2. அசரம்

**தைலம் பாகம்—3**

1. மிருதுபாகம்
2. சிக்குபாகம்
3. கரகரப்புபாகம்

**தைலவகை—12**

1. கொதித்தைலம்
2. உருக்குத்தைலம்
3. புடத்தைலம்
4. தீநீர்த்தைலம்
5. ஆதவத்தைலம்
6. விருட்சத்தைலம்
7. சிலைத்தைலம்
8. நீர்த்தைலம்
9. ஆவித்தைலம்
10. சுடர்த்தைலம்
11. இயந்திரத்தைலம்
12. மண் தைலம்

**தைலவருக்கம்—5**

1. முடித்தைலம்
2. குடித்தைலம்
3. பிடித்தைலம்
4. துளைத்தைலம்
5. சிலைத்தைலம்

**நகத்தின்வகை—10**

1. கைநகம்
2. கால்நகம்
3. சொத்தைநகம்
4. புலிநகம்
5. மேல்வளைந்தநகம்
6. உள்வளைந்தநகம்
7. கிளிமூக்குநகம்
8. ஆமையோட்டுநகம்
9. குழிநகம்
10. அழுந்தும்நகம்

**நஞ்சேறுவேகம்-3**

நஞ்சானது உடம்பில் பற்றுதலின் துரிதம்

1. வாயுவேகம்
2. வருணவேகம்
3. அக்கினிவேகம்

**நட்சத்திரம்-27**

1. அசுவனி
2. பரணி
3. கார்த்திகை
4. உரோகிணி
5. மிருகசீரிடம்
6. திருவாதிரை
7. புனர்பூசம்
8. பூசம்
9. ஆயிலியம்
10. மகம்
11. பூரம்
12. உத்திரம்
13. அத்தம்
14. சித்திரை
15. சுவாதி
16. விசாகம்
17. அனுடம்
18. கேட்டை
19. மூலம்
20. பூராடம்
21. உத்திராடம்
22. திருவோணம்
23. அவிட்டம்
24. சதயம்
25. பூரட்டாதி
26. உத்திரட்டாதி
27. இரேவதி

**நவகண்டம்**

1. கீழ்விதேகம்
2. மேல்விதேகம்
3. வடவிதேகம்
4. தென்விதேகம்
5. வடவிரேபதம்
6. தென்னிரேபதம்
7. வடபரதம்
8. தென்பரதம்
9. மத்திமகண்டம்

**நவக்கிரகம்**

1. ஆதித்தன்
2. சோமன்
3. அங்காரகன்
4. புதன்
5. பிரகற்பதி
6. சுக்கிரன்
7. சனி

8. இராகு
9. கேது

**நவசக்தி**

1. பிராமணி
2. கார்த்திகை
3. இந்திராணி
4. மகேஸ்வரி
5. நரசிம்மி
6. பிரதானி
7. ரௌத்திரி
8. வராகி
9. வைஷ்ணவி

**நவசித்தர்**

1. சத்தியநாதர்
2. சதோகநாதர்
1. ஆதிநாதர்
4. அநாதிநாதர்
5. வகுளிநாதர்
6. மதங்கநாதர்
7. மச்சேந்திர நாதர்
8. கடந்திர நாதர்
9. கோரக்கநாதர்

**நவதாரணை**

1. நாமதாரணை
2. மாயாதாரணை
3. பேததாரணை
4. மந்திரதாரணை
5. சதுரங்கதாரணை
6. சத்ததாரணை
7. வத்துத்தாரணை
8. வச்சிரதாரணை
9. சித்தர்தாரணை

**நவத்துவாரம்**

1. நாசி 2
2. கண் 2
3. காது 2
4. வாய் 1
5. குதம் 1
6. குய்யம் 1

**நவநிதி**

1. கச்சபநிதி
2. கற்பநிதி
3. சங்கநிதி
4. பதுமநிதி
5. நந்தநிதி
6. நீலநிதி
7. மகாநிதி
8. மகாபதுமநிதி
9. முகுந்தநிதி

**நாட்டமைதி – 6**

1. செல்வம்
2. விளைநிலம்
3. செங்கோல்
4. நோயின்மை
5. வளம்
6. குறும்பின்மை

**நாலுசாதிப்பெண்**

1. பத்மினி
2. சங்கினி
3. சித்தினி
4. அத்தினி

**நாலுவித்தை**

1. வாதம்
2. வைத்தியம்
3. யோகம்
4. ஞானம்

(வேறு)

1. வாதம்
2. வசியம்
3. மாற்றம்
4. அஞ்சனம்

**நால்வகைப் பிறப்பு**

1. அண்டசம் — முட்டை
2. சுவேதசம் — வியர்வை
3. சராயுசம் — கருப்பை
4. உற்பீசம் — நிலம்

**நால்வகை மருந்து**

1. சல்லியகரணி
2. சந்தானகரணி
3. சமனியகரணி
4. மருதஞ்சீவினி

**நார்வகை-7**

1. நரம்புநார்
2. உபநார்
3. மூளைஇடைநார்
4. மயிர்நார்
5. தசைநார்
6. பாலைநார்
7. பாசிநார்

**நாற்சாதிக்கரு**

1. பிரகருப்பிண்டம்
2. சதிரியப்பிண்டம்
3. வைசியப்பிண்டம்
4. சூத்திரப்பிண்டம்

**நிலை-5**

1. வைசாக நிலை — ஒரு காலின் றொரு கால் சாணிடைந்து நிற்றல்
2. மண்டல நிலை — இரு காலும் பக்கம் வளைய மண்டலித்தல்
3. ஆலடநிலை — வலக்கால் மண்டலித்து இடக் கால் முந்துறல்
4. பீரத்தியாலீட நிலை — வலக்கால் முந்துற்றிடக்கால் மண்டலித்தல்
5. சம்பந்த நிலை — இரண்டு காலும் சரியாக வைத்து நிற்றல்

**பஞ்சகசாயம்**

ஐந்துவகைச் சரக்குகள்

1. தேன்
2. நெய்
3. பால்

4. வாழை
5. சர்க்கரை

**பஞ்சகந்தம்**

ஐந்துவித வாசனைப் பொருட்கள்

1. ஏலம்
2. இலவங்கம்
3. கற்பூரம்
4. சாதிக்காய்
5. தக்கோலம்

**பஞ்சகருமம்**

1. வாந்தியுண்டுசெய்தல்
2. பேதியுண்டாக்கல்
3. ஆசனமூலம் குடலைச் சுத்தி செய்தல்
4. நசியமிடல்
5. இரத்தத்தை வெளியாக்கல்

**பஞ்சகலை**

1. நிவர்த்தி
2. பிரதிட்டை
3. வித்தை
4. சாந்தி
5. சாந்தியாதீதம்

**பஞ்சகாவியம்**

1. வாதம்
2. வைத்தியம்
3. இலட்சணம்
4. மாந்திரீகம்
5. ஞானம்

**பஞ்சகிருத்தியம்**

1. சிருட்டி
2. திதி
3. சங்காரம்
4. திரோபயம்
5. அனுக்கிரகம்

**பஞ்சகோசம்**

1. அன்னமயகோசம்
2. பிராணமயகோசம்
3. மனோமயகோசம்
4. விஞ்ஞானமயகோசம்
5. ஆனந்தமயகோசம்

**பஞ்சசத்தி**

1 ஆதிசத்தி
2. பராசத்தி
3. இச்சாசத்தி
4. கிரியாசத்தி
5. ஞானசத்தி

**பஞ்சசத்து**

1. காய்ச்சியபால்
2. சருக்கரை
3. தேன்
4. திப்பிலி
5. நெய்

**பஞ்சசயனம்**

1. அன்னத்தூவி
2. இலவம்பஞ்சு
3. செம்பஞ்சு
4. மயில்தூவி
5. வெள்ளைப்பஞ்சு

**பஞ்சசித்தர்**

1. அசுவினிதேவர்
2. அகத்தியர்
3. புலத்தியர்
4. இராமதேவர்
5. யூகிமுனி

**பஞ்ச சிலேத்துமம்**

1. அவலம்பகம்
2. கிலேதகம்
3. போதகம்
4. தற்பகம்
5. சந்திகம்

**பஞ்ச சிவதத்துவங்கள்**

1. சுத்தவித்தை (தூயநினைவு)
2. ஈசுரம் (தலைமை)
3. சாதாக்கியம் (அருள்நிலை)
4. சத்தி (அன்னை)
5. சிவம் (அத்தன்)

**பஞ்சசுத்தி**

1. மண்ணிற்குள் புதைத்து வைத்தல்
2. தண்ணீர், கஷாயம் திராவகம், செயநீர் காடி முதலியவை களால் கழுவுதல்
3. அவித்தல், புடமிடல், எரித்தல்
4. காற்றில் உலர வைத்தல்
5. சூரிய வெயில் அல்லது வெளிச்சத் திடல்

**பஞ்சசுத்தி (வேறு)**

1. ஆத்துமசுத்தி
2. இலிங்கசுத்தி
3. திரவியசுத்தி
4. பூதசுத்தி
5. மந்திரசுத்தி

**பஞ்ச சூளை**

1. அம்மி
2. உரல், உலக்கை
3. துடைப்பம்
4. அடுப்பு
5. நீர்க்குடம்

**பஞ்சதீக்கிகம்**

1. உதரம்
2. கண்
3. கை
4. மார்பு
5. மூக்கு

**பஞ்சநிந்தனம்**

1. கண்
2. வாய்
3. கை
4. மூத்திரம்
5. மலம்

**பஞ்சநீர்**

1. மூத்திரம்
2. விந்து
3. வியர்வை
4. உமிழ்நீர்
5. கண்ணீர்

**பஞ்சபசு**

1. நந்தை
2. பத்திரை
3. சுரபி
4. சூலை
5 அமனை

**பஞ்சபாணாவத்தை**

1. சுப்பிரயோகம்
2. விப்பிரயோகம்
3. சோகம்
4. மோகம்
5. மரணம்

**பஞ்சபூதநாடி**

1. வாதநாடி
2. பித்தநாடி
3. சிலேட்டுமநாடி
4. குருநாடி
5. பூதநாடி

**பஞ்சபூதலிங்கம்**

1. பிருதிவிலிங்கம்
— காஞ்சி
2. அப்புலிங்கம்
— திருவானைக்காவல்
3. தேயுலிங்கம்
— திருவண்ணாமலை
4. வாயுலிங்கம்
— காளகத்தி
5. ஆகாயலிங்கம்
— சிதம்பரம்

**பஞ்சமலம்**

1. கண்பீளை
2. காதுக்குறும்பி
3. மூக்குச்சளி
4. வாயெச்சில்
5. உடல்வியர்வை

**பஞ்ச மாபாதகம்**

1. கொலை
2. பொய்
3. களவு
4. கட்குடி
5. குருநிந்தை

**பஞ்சமித்திரம்**

1. நல்லெண்ணெய்
2. தேங்காய்ப்பால்

3. இலுப்பைப் பூச்சாறு
4. பசுநெய்
5. தேன்

**பஞ்சமுத்திரை**

1. உருத்திராட்சம்
2. கமண்டலம்
3. காவி வேட்டி
4. சடைமுடி
5. யோகத்தண்டு

**பஞ்சயாகம்**

1. கன்ம யாகம்
2. செப யாகம்
3. ஞான யாகம்
4. தபோ யாகம்
5. தியான யாகம்

**பஞ்சலிங்கக்கல்**

1. படிகம்
2. கணநாதம்
3. சாலிக்கிராமம்
4. அம்பிகை
5. பானம்

**பஞ்சவக்தரம்**

1. இரசம்
2. நாபி
3. கந்தகம்
4. மிளகு
5. வெண்காரம்

**பஞ்சவசனாதிகள்**

1. வசனம் (சொல்லல்)
2. கமனம் (நடத்தல்)
3. தானம் (கொடுத்தல்)
4. விசர்ச்சனம் (விடுதல்)
5. ஆனந்தம் (மகிழ்தல்)

**பஞ்சவசியம்**

1. ஆண் வசியம்
2. பெண் வசியம்
3. உலக வசியம்
4. மிருக வசியம்
5. பூதகண்வசியம்

**பஞ்சவர்ணம்**

1. கருப்பு
2. சிவப்பு
3. பச்சை
4. வெள்ளை
5. மஞ்சள்

**பஞ்ச அறிவு**

1. பகுத்தறிவு
2. மெய்யறிவு
3. பேரறிவு
4. ஆத்ம அறிவு
5. தத்துவ அறிவு

**பஞ்சாமிர்தம் அல்லது ஐந்தமுதம்**

1. சருக்கரை
2. தயிர்
3. தேன்
4. நெய்
5. பால்

**பஞ்சாவத்தை**

1. சாக்கிரம்
2. சொப்பனம்
3. சுழுத்தி
4. துரியம்
5. துரியாதீதம்

**பஞ்சான்மா**

ஐந்துவகை ஆன்மநிலை

1. அந்தரான்மா
2. சீவான்மா
3. தத்துவான்மா
4. பூதான்மா
5. மந்திரான்மா

**பஞ்சேந்திரியம்**

1. மெய்
2. வாய்
3. கண்
4. மூக்கு
5. செவி

**பதார்த்தம்-7**

1. பொருள் — திரவியம்
2. பண்பு — குணம்
3. தொழில் — கருமம்
4. பொதுமை — சாமாணியம்
5. சிறப்பு — விசேடம்
6. ஒற்றுமை — சமவாயம்
7. இன்மை — அபாவம்

**பதினாறு பேறு**

1. புகழ்
2. கல்வி
3. வலி
4. வெற்றி
5. நன்மக்கள்
6. பொன்
7. நெல்
8. நல்லூழ்
9. நுகர்ச்சி
10. அறிவு
11. அழகு
12. பெருமை
13. இளமை
14. துணிவு
15. நோயின்மை
16. வாழ்நாள்

**பதினான்கு வேகங்கள்**

1. அபானவாயு
2. தும்மல்
3. சிறுநீர்
4. மலம்
5. கொட்டாவி
6. பசி
7. நீர்வேட்கை
8. இருமல்
9. இளைப்பு
10. தூக்கம்

11. வாந்தி
12. கண்ணீர்
13. சுக்கிலம்
14. சுவாசம்

**பதினெண் உடற்குற்றங்கள்**

1. பசி
2. தாகம்
3. பயம்
4. கோபம்
5. உவகை
6. ஆசை
7. நினைப்பு
8. உறக்கம்
9. நரை
10 நோய்
11. மரணம்
12. பிறப்பு
13. மதம்
14. இன்பம்
15. அதிசயம்
16 வியர்த்தல்
17. துக்கம்
18. கையறவு

**பதினெண்சித்தர்**

(அபிதானசிந்தாமணி)

1. அகத்தியர்
2. போகர்
3. கோரக்கர்
4. கைலாச நாதர்
5. சட்டைமுனி
6. திருமூலர்
7. நந்தி
8. கூன்கண்ணர்
9. கொங்கணர்
10. மச்சமுனி
11. வாசமுனி
12. கூர்மமுனி
13. கமலமுனி
14. இடைக்காடர்
15. புண்ணாக்கீசர்
16. சுந்தரானந்தர்
17. உரோமரிஷி
18. பிரமமுனி

வேறு (தமிழ்ப் பேரகராதி)

1. திருமூலர்
2. இராமதேவர்
3. கும்பமுனி
4. இடைக்காடர்
5. தன்வந்திரி
6. வால்மீகி
7. கமலமுனி
8. போகநாதர்
9. மச்சமுனி
10. கொங்கணர்
11. பதஞ்சலி
12. நந்திதேவர்
13. போதகுரு
14. பாம்பாட்டி
15. சட்டைமுனி
16. சுந்தரானந்தத்தேவர்
17. குதம்பைச்சித்தர்
18. கோரக்கர்

**வேறு** (கருவூரார் பலதிரட்டு)

1. நந்தீசர்

2. திருமூலர்
3. சிவயோகர்
4. கருமுனிவர்
5. இடைக்காட்டீசர்
6. காலாங்கி
7. பிண்ணாக்கீசர்
8. மச்சமுனி
9. கொங்கணர்
10. கஞ்சமலைச்சித்தர்
11. சட்டைநாதர்
12. பிரமர்
13. வியாக்கிரமர்
14. கமலமுனி
15. உருத்திரச்சித்தர்
16. கூன்கண்ணர்
17. பதஞ்சலி
18. போகர்

**வேறு**

1. சநாதர்
2. வியாக்கிரமர்
3. சட்டர்
4. உரோமச்சித்தர்
5. சுந்தரர்
6. மச்சநாதர்
7. போகர்
8. கமலர்
9. திருமூலர்
10. சனானந்தர்
11. காலாங்கி
12. மலையேணிச்சித்தர்
13. நந்தி
14. புலத்தியர்
15. பிண்ணாக்கீசர்
16. கடுவெளிச்சித்தர்
17. சிவயோகர்
18. குருமுனிவர்

**வேறு**

1. அகத்தியர்
2. உரோமர்
3. தேரையர்
4. புலிப்பாணி
5. இராமதேவர்
6. அகப்பேய்ச்சித்தர்
7. அழுகண்ணர்
8. குதம்பைச்சித்தர்
9. போகர்
10. பிண்ணாக்கீசர்
11. தன்வந்திரி
12. கொங்கணர்
13. சட்டைமுனி
14. கருவூரார்
15. உரோமர்
16. கமலர்
17. கன்னிச்சித்தர்
18. புலத்தியர்

**வேறு**

1. அகத்தியர்
2. உரோமர்
3. கமலர்
4. யூகி
5. கருவூரார்
6. மச்சேந்திரர்
7. போகர்
8. கொங்கணவர்
9. பிண்ணாக்கீசர்

10. தேரையர்
11. கோரக்க நாதர்
12. சட்டைமுனி
13. பாம்பாட்டி
14. சிவவாக்கியர்
15. இடைக்காடர்
16. புலிப்பாணி
17. சுந்தரானந்தர்
18. கடுவெளிச்சித்தர்

**வேறு**

1. கோரக்கர்
2. கொங்கணர்
3. சட்டைநாதர்
4. கௌசிகர்
5. கல்லுளிச்சித்தர்
6. அகத்தியர்
7. தேரையர்
8. புலத்தியர்
9. கன்னிச்சித்தர்
10. சிவவாக்கியர்
11. கூன்கண்ணர்
12. புலிப்பாணி
13. சுந்தரானந்தர்
14. குதம்பைச்சித்தர்
15. வாலை
16. மச்சமுனி
17. இராமதேவர்
18. ஆருட சித்தர்

**வேறு**

1. கன்னிமலையான்
2. வாசமுனி
3. இராமதேவர்
4. கூன்கண்ணர்
5. நவநாதர்
6. வாலைச்சித்தர்
7. தேரையர்
8. சண்டிகேசர்
9. யூகிமுனி
10. சூதமுனி
11. பிண்ணாக்கீசர்
12. ஆருடச்சித்தர்
13. குதம்பைச்சித்தர்
14. சோனாசித்தர்
15. போகர்
16. பூனைக்கண்ணர்
17. சிவவாக்கியர்
18. புலிப்பாணி

**வேறு**

**Encyclopaedia of Indian Medicine.**

1. அகத்தியர்
2. திருமூலர்
3. போகர்
4. கோரக்கர்
5. சட்டைமுனி
6. நந்திசர்
7. கொங்கணர்
8. கமலமுனி
9. இடைக்காடர்
10. சுந்தரானந்தர்
11. உரோமமுனி
12. பிரமமுனி
13. மச்சமுனி
14. வராகமுனி
15. கூர்மமுனி

16. பிண்ணாக்கீசர்
17. கைலாசநாதன்
18. கூன்கண்ணர்

(வேறு) (கருவூரார் பல திரட்டு)

1. நந்தீசர்
2. திருமூலர்
3. அகத்தியர்
4. சட்டைநாதர்
5. பதஞ்சலி
6. ஊனர்
7. கண்ணர்
8. கோரக்கர்
9. கமலமுனி
10. சண்டிகேசர்
11. இடைக்காடர்
12. சிவாயசித்தர்
13. கொங்கணவர்
14. போகர்
15. மச்சமுனி
16. பிண்ணாக்கீசர்
17. காலாங்கி
18. சுந்தரானந்தர்

(வேறு) *History of Siddha Medicine*

1. அருணந்தி
2. புசுண்டர்
3. திருமூலநாதர்
4. வியாக்ரமர்
5. பதஞ்சலி
6. சிவயோகர்
7. சநாதர்
8. சனகர்
9. சட்டநாதர்
10. பிரமர்
11. இந்திரன்
12. சோமநாதர்
13. கந்துரு
14. கலாங்கி
15. உருத்திரச் சித்தர்
16. ஒளியகத்தியர்
17. கஞ்சமலைச்சித்தர்
18. புலத்தியர்

**வேறு**

1. சட்டைமுனி
2. கொங்கணர்
3. இடைக்காடர்
4. நந்தி
5. கமலமுனி
6. கருவூர்ச்சித்தர்
7. பிண்ணாக்கீசர்
8. கன்னிச்சித்தர்
9. வாலைமுனி
10. சண்டிகேசர்
11. பிர்மமுனி
12. அகப்பேய்ச்சித்தர்
13. வாசமுனி
14. அழுகண்ணர்
15. உரோமர்
16. மச்சர்
17. சுந்தரர்
18. மூலநாதர்

**வேறு**

1. கோரக்கர்

2. அழுகண்ணர்
3. அகப்பேய்ச்சித்தர்
4. கொங்கணர்
5. இடைக்காடர்
6. குதம்பைச்சித்தர்
7. சண்டிகேசர்
8. இராமதேவர்
9. வாசமுனி
10. பாம்பாட்டிச்சித்தர்
11. போகர்
12. கன்னிச்சித்தர்
13. மச்சர்
14. சட்டைநாதர்
15. பிண்ணாக்கீசர்
16. சுந்தரர்
17. புலத்தியர்
18. அகத்தியர்

**வேறு**

1. அகத்தியர்
2. யூகி
3. கல்லுளி
4. அகப்பேய்
5. வாலைசித்தர்
6. புலிப்பாணி
7. தேரையர்
8. இராமதேவர்
9. சூதம்பை
10. கூன்கண்ணர்
11. கன்னிச்சித்தர்
12. புலத்தியர்
13. வாசர்
14. கம்பளிச்சித்தர்
15. கமலர்
16. சுந்தரர்
17. கடுவெளிச்சித்தர்
18. பிர்மமுனி

**வேறு**

1. பொதிகை முனி
2. உருத்திரச்சித்தர்
3. கன்னிச்சித்தர்
4. மச்சேந்திரர்
5. கடுவெளியார்
6. இராமதேவர்
7. சட்டைமுனி
8. அழுகண்ணர்
9. சோனாசித்தர்
10. போகர்
11. யூகிமுனிவர்
12. ஆரூடசித்தர்
13. கமலர்
14. நவநாதசித்தர்
15. கௌசிகர்
16. புலிப்பாணி
17. தேரையர்
18. புலத்தியர்

**வேறு**

1 கௌசிகர்
2. யூகி
3. கன்னிச்சித்தர்
4. கல்லுளிச்சித்தர்
5. கடுவெளிச்சித்தர்
6. வாசமுனி
7. வாலைச்சித்தர்
8. சூதமுனி
9. மச்சேந்திரர்

10. தன்வந்திரி
11. கூன்கண்ணர்
12. விளையாட்டீசர்
13. கம்பளிச்சித்தர்
14. புலிப்பாணி
15. பூனைக்கண்ணர்
16. கோரக்கர்
17. புலத்தியர்
18. அழுகண்ணர்

**வேறு (சா. பி. அ.)**

1. திருமூலர்
2. புலத்தியர்
3. நந்திகேசர்
4. இடைக்காடர்
5. அகத்தியர்
6. பிண்ணாக்கீசர்
7. போகர்
8. புலிக்கீசர்
9. கொங்கணர்
10. அழுகுண்ணி
11. பாம்பாட்டி
12. குதம்பை
13. கருவூரார்
14. அகப்பேய்
15. தேரையர்
16. சட்டைமுனி
17. பூனைக்கண்ணர்
18. கர்லாங்கி

**வேறு**

1. இராமதேவர்
2. திருமூலர்
3. கும்பமுனி
4. வான்மீகி
5. இடைக்காடர்
6. தன்வந்திரி
7. மச்சமுனி
8. கமலமுனி
9. போகர்
10. கொங்கணர்
11. நந்தீசர்
12. பதஞ்சலி
13. கோரக்கர்
14. சட்டமுனி
15. பாம்பாட்டி
16. குதம்பை
17. கருவூரார்
18. சுந்தரர்

**வேறு**

(சித்த மருத்துவப் பாட போதம்)

1. அகத்தியர்
2. திருமூலர்
3. காலாங்கி
4. போகர்
5. புலிப்பாணி
6. சட்டைமுனி
7. மச்சமுனி
8. இராமதேவர்
9. கமலமுனி
10. உரோமமுனி
11. கருவூரார்
12. இடைக்காடர்
13. சுந்தரானந்தர்
14. அகப்பேய்ச்சித்தர்
16. பாம்பாட்டிச்சித்தர்

16. தேரையர்
17. யூகிமுனி
18. யாக்கோபு

**வேறு**

1. திருமூலர்
2. புலத்தியர்
3. நந்திதேவர்
4. இடைக்காடர்
5. அகத்தியர்
6. புண்ணாக்கீசர்
7. போகர்
8. புலிப்பாணி
9. கொங்கணவர்
10. அழுகண்ணி
11. பாம்பாட்டி
12. குதம்பைச்சித்தர்
13. கருவூரார்
14. அகப்பேய்ச்சித்தர்
15. தேரையர்
16. சட்டைமுனி
17. பூனைக்கண்ணர்
18. காலாங்கி

**பரிகாரமுறை–3**

1. விண்ணவருறை
2. மக்களுறை
3. சூருறை

**பரிசம்–4**

1. சீதம்
2. உட்டிணம்
3. மிருது
4. கடினம்

**பருவகாலம்–6**

1. கார்காலம்–ஆவணி–புரட்டாசி
2. கூதிர்காலம்–ஐப்பசி–கார்த்திகை
3. முன்பனி–மார்கழி–தை
4. பின்பனி–மாசி–பங்குனி
5. இளவேனில்–சித்திரை–வைகாசி
6. முதுவேனில்–ஆனி–ஆடி

**பாகசாலை–9**

1. மருந்துச்சாலை
2. துலைச்சாலை
3. புனிதச்சாலை
4. உரற்சாலை
5. அரைப்புச்சாலை
6. உலர்த்தும்சாலை
7. குமிழப்புச்சாலை
8. காற்றுலவும்சாலை
9. காற்றுலவாச்சாலை

**பித்தம்–5**

1. அனலபித்தம்
2. இரஞ்சகப்பித்தம்
3. சாதகப்பித்தம்
4. ஆலோசகப்பித்தம்
5. பிராசகப்பித்தம்

**பிரத்தியங்கம்–16**

1. மார்பு

2. கழுத்து
3. தனம்
4. தோள்
5. கொப்பூழ்
6. வயிறு
7. குய்யம்
8. கண்
9. மூக்கு
10. காது
11. நெற்றி
12. கால்
13. விரல்
14. தொடை
15. முழங்கால்
16. கணுக்கால்

**பிரமேயப் பொருள்கள்–9**

1. பிருதிவி
2. அப்பு
3. தேயு
4. வாயு
5. ஆகாசம்
6. காலம்
7. திக்கு
8. ஆத்மா
9. மனம்

**பிராணாயாம நிலை–3**

1. பூரகம்
2. கும்பகம்
3. இரேசகம்

**பிள்ளை–3**

1. தென்னம்பிள்ளை
2. கீரிப்பிள்ளை
3. அணிற்பிள்ளை

**புகை வகை–6**

1. வேள்விப்புகை — தீர்க்காயுள்
2. சுடுகாட்டுப்புகை — ஆயுள் குறையும்
3. நறும்புகை — ஆரோக்கியம்
4. தைலப்புகை வாதம்போம்
5. இரசப்புகை — கந்தம்
6. பாடாணப்புகை — நோயுண்டாகும்

**புடதிட்டம்–7**

1. காடைப்புடம் — எருஒன்று
2. கவுதாரிப்புடம் — எருமூன்று
3. குக்குடப்புடம் — எருபத்து
4. வராகபுடம் — எருஐம்பது
5. கஜபுடம் — எருஆயிரம்
6. மணல்மறைவுப்புடம் எருதொண்ணூறு
7. பூமிப்புடம் — ஆட்டெரு — அகல நீளம் நான்கு விரற்கிடை

**புடபாகம்–6**

1. காடைப்புடம் — 1 வரட்டி
2. கவுதாரிப்புடம் — 3 வரட்டி
3. குக்குடப்புடம் — 10 வரட்டி
4. வராகபுடம் — 50 வரட்டி
5. கனபுடம் — 800 வரட்டி
6. கஜபுடம் — 1000 வரட்டி

**புடம்–6**

1. கோபுடம் — 1000 எரு
2. கசபுடம் — 500 எரு
3. வராகபுடம் — 200 எரு
4. குக்குடப்புடம் — 8 எரு
5. கோவுரப்புடம்
6. பாணிடப்புடம்

**புடவகை–8**

1. உமிப்புடம்
2. தானியப்புடம்
3. சூரியப்புடம்
4. சந்திரப்புடம்
5. அமாவாசைப்புடம்
6. பருவப்புடம்
7. பனிப்புடம்
8. பட்டைப்புடம்

**புண்ணியத்தோற்றம்–4**

1. தவம்
2. ஒழுக்கம்
3. கொடை
4. கல்வி

**புண்ணியம்–7**

1. தாழ்மை
2. தானம்
3. விரதம்
4. சினேகம்
5. நயபோசனம்
6. பொறுமை
7. உற்சாகம்

**பூதம்–5**

1. பிருதிவி (மண்)
2. அப்பு (புனல்)
3. தேயு (அனல்)
4. வாயு (கால்)
5. ஆகாயம் (விசும்பு)

**பூமிவகை–3**

1. மேட்டுப்பூமி
2. தாழ்ந்தபூமி
3. சமபூமி

**பெண்ணின்தத்துவம்–8**

சோதிட நூற்படி இன்ன நட்சத்திரங்களில் பிறந்த பெண் இன்னின்ன இயற்கைக் குணங்களைப் பெறுவாள்.

1. தெய்வ தத்துவம்
2. முனித் தத்துவம்
3. நாகத் தத்துவம்
4. காந்தர்வத் தத்துவம்
5. பதத் தத்துவம்
6. இயக்கித் தத்துவம்
7. அரக்கித் தத்துவம்
8. வைசாசத் தத்துவம்

**பெண்ணின்பருவம்–7**

1. பேதை
2. பெதும்பை
3. மங்கை
4. மடந்தை
5. அரிவை
6. தெரிவை
7. பேரிளம்பெண்

**பேதம்–3**

1. சுபேதம்-தனக்குள்ளே பேதம் (மரத்துக்கு இலை, அரும்பு, பூ, காய், கனி,)
2. சசாதிபேதம் – தன் சாதியிற்பேதம் மரத் துக்கு மறு மரம்)
3. விசாதிபேதம் – வேறு சாதிபேதம் (மரத்துக்குக் கல்)

**பொழுது – 2**

1. பெரும்பொழுது – கார் கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில். முதுவேனில்,
2. சிறுபொழுது – மாலை, யாமம், வைகறை, எற்பாடு, நண்பகல்

**பொழுது – 6**

1. மாலை
2. யாமம்
3. வைகறை
4. விடியல் (காலை)
5. நண்பகல்
6. எற்பாடு

**பொருள்கள் – 2**

1. இயங்கும் பொருள்
   உயர்திணை
   அஃறிணை
2. இயங்காப்பொருள்
   தாது
   தாவர
   சங்கமம்

**பொருள் – 4**

1. அறம்
2. பொருள்
3. இன்பம்
4. வீடு

**பூர்வவேதம் – 4**

1. தைத்திரியம் — அறவொழுக்கம் பற்றியது
2. பௌடிகம் — அரச நீதி பற்றியது

